

'கசடதபற' சென்ற இரு இதழ்களாகக் காலங்கடந்து வருவது வருந்தத்தக்கது என்பதில் வாசகர்களோடு நாங்களும் பங்கு கொள்கிறோம். சில நிர்வாகக் காரணங்களால் தாமதம் தவிர்க்க இயலாததாகி விட்டது. இதழ்கள் இனி குறித்த நேரத்தில் வரும்.

தொடர்பு கொள்ள வேண்டிய புதிய முகவரி :

**கசடதபற 23 பி. எஃப். குவாட்டர்ஸ் சென்னை 600 034**

---

அட்டை ஓவியம் : ஆதிமூலம்

---

# ஆதிநாதன் கவிதைகள் - ஆறு

கிராமத்துக் கூட்டமொன்றில்
புரட்சியின் வடிவம் விவரித்தேன்!

"கொழுமுனை புரட்டிய மண்ணைப் போல
அரும்பு பூவாய் மலர்தல் போல
மண்கட்டி நீரில் கரைதல்போல
புரட்சியிங்கமைத்தல் வேண்டும்"

முதிய உழவன் இடைமறித்தான்

"எருதிற்கு நேற்று காயடித்தேன்
அது?"



பதமிட்ட திராட்சையுடலில்
கரைத்த சுகங்களை
இருந்திருந்து தேடும் மனத்தோடு
உயிரை நாளைக்குக் கடத்தும்
'முதுமை' திண்ணைப்பேறு.



சாகக்கிடந்தவன் முனகலில்

"ஐயா பிச்சை" யென்றான்
முகஞ்சுளித் தப்பால் சென்றேன்?

மறுநாள் இறந்தே போனான்!
அனாதைப் பிணம்! அதற்கொரு
தருமம் செய்தேன்!

ஒருநாளோடு போயிற்று!



# உடைப்பு

**ஆதாம்**

"என்ன ஊர்வலம் இது?" என்று கேட்டேன். அருகிலிருந்தவனிடமிருந்து பதில் இல்லை. அருகில் இருந்தவன் பதில் சொல்பவனுய்த் தெரியவில்லை. அவனுடைய எதிர் நிமிட நோக்கங்களிலேயே சிறைப்பட்டதனல் ஒரு முகப்பட்டவனுய்த் தெரிந்தான். அவன் என்னை ஒரு முறை, கேள்வியைக் காதில்வாங்கிக் கொள்ளாதவனுய்ப் பார்த்துவிட்டுத் திரும்பவும் நடக்கத் தலைப்பட்டான். நான், பின்தங்கி பதில் சொல்லக் கூடியவனுய்த் தெரிந்த ஒருவனிடம் மறுபடி கேட்டேன். "என்ன? திறப்பு விழாவா? சிலை திறப்பா?" அவனும் 'இல்லை' யென்று சொல்லிவிட்டு ஒரு வார்த்தைப் பதிலிலேயே திருப்தியுற்று நடக்கலானுன். மற்றவர்களில் தேடிப் பிடித்து ஆராய்ந்து ஒருவனைத் தேர்ந்தெடுத்து, கேள்விகேட்கிற அக்கறையும் பொறுமையும் எனக்கு அப்போதைக்கு இல்லை. எனவே, நான் நடைபாதையில் ஒதுங்கி, மெதுவாக, நகர்ந்தபடி, ஓரப்பட்டு அவர்களைப் பார்வையிடலானேன். அவர்களுடைய நடையின் சீரான வேகம் ஒரு கோஷத்தின் லயத்தைக் கொண்டிருந்தது. அதனுல்தானே என்னவோ அவர்கள் கோஷமேதும் போடாமல் வெறுமனே நடந்து சென்று கொண்டிருந்தார்கள். பக்கத்தில் இருந்த டீக்கடைக்குள் சென்று ஒரு டீக்கு ஆர்டர் செய்து மறுபடி அவர்களைப் பார்த்தேன். கடையினுள்ளிருந்தும் கூட அவர்களைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. அவர்கள் நிறையப் பேர் இருந்தார்கள். அந்த இரவுப் பொழுதின் மங்கிய தெரு விளக்கொளியில் அவர்கள் நகர்வது கருவண்ணத்தில் தீட்டப்பட்ட ஒரு நிழற்படிமச் சித்திரம் போலிருந்தது. டீயின் கதகதப்பு, இரவின் சிலுசிலுப்பில் இதமாகஇருந்தது. அந்த இதத்தையெல்லாம் தேடாமல் அவர்கள் நடந்துபோய்க் கொண்டிருந்தார்கள். அவர்களில் சிலருக்கு மேல் சட்டை கூட ஏதுமில்லை. மடித்துக் கட்டிய வேஷ்டிகள் காற்றில் படபடத்தன. 'சட்'டென்ற பார்வைக்கு ஊர்வலம் மாதிரியல்லாமல் ஏதோ ஒரு கும்பல் மாதிரித் தெரிகிற அதன் தன்மை எனக்கு விளங்கினுற் போலிருந்தது. டீ முடிந்துவிட்டது. சாக்கரின் ஏகமாய்த் தான் கலந்திருக்கிருன். அதன் கடைசித் துளிகள் நாக்கில் பட்டு ஏகமாய்த்தித்திப்பு உணர்வூட்டி, கண நேரத்துக்கெல்லாம் கரித்தன. வெளியே வந்தேன்.

மௌனமாய் அவர்களிடமிருந்து விலகி அவர்களுக்கு இணையாகச் செல்லத்தான் முடிந்தது. அவர்களுடைய நோக்கங்களைக் கேட்டறிய முடியாத இயலாமையுடன் நான் தொடர்ந்து சென்றேன்.

"பொய் சொன்னால்தான்
பிழைக்கலாம் இப்போதெல்லாம்
உன் பிழைப்பு எப்படி?'' என்றே
முதியவர் கேட்டு நின்றார்.

"கடவுளே'' என்று சொல்லிப்
பிழைப்பதாய்க் கூறினேன்!
தவறுயென்ன?

●

"ஒரே வெண்கொற்றக் குடை
தான்மட்டும் அதனடியில்
உலகனைத்தும் தன் காலடியில்''

மக்கிய இந்த ஆசைகள்
மீண்டும் மீண்டும்
மழைக்கால ஈரவெளிகளில்
ஆளரவமற்ற காலைப்போதில்
வெட்கத்துடன்
நாய்க் குடைகளாய் உயிர்ப்புக் கொள்ளும்

●

ஒரு காற்றசைவுக்குப் பின்
நிறைய மேகங்கள்
வரிசையாய்ச் சென்று
குவியலாய் மிதந்தன!

ஒரு இடியின் நசிவில்
மழையாய் ஒழுகின!

அழுக்குகள் கரைந்து கரைந்து
சாக்கடைக்குள் சரிந்தன!

தார்ச்சாலைத் தூய்மையில்
சிலிர்த்த நகரங்களின்
குடி நீர்க் குழாயடியில்
வாயும் வயிறுமாய்,
பானைகள் குடங்கள் வாளிகளின்
நீண்ட வரிசைகள்

யார் சாபமிட்டது
நிறுவனத்து முற்றங்களில்
சான்றிதழ்களோடு காத்திருக்கும்
இந்த இளைஞர்களை—யுவதிகளை.

●

பட்ட மதிப்பீடுகள் தகர்ந்து விழுவதைப்போல, ஒரு கணத்தில் தன்னைப் பாதுகாத்துக் கொள்கிற பௌதீகபலமோ, ஆன்மீக பலமோ, இன்றி ஒரு சரிவு. "இவர்களா?" என்று சுற்றுமுற்றும் பார்த்தேன். நம்புவதற்குச் சிரமமாகக் கூட இருந்தது. "இவர்களா இந்த உடைப்பைச் செயல் படுத்தினார்கள்?" என்று தீவிரத்துடன் எண்ணத் தொடங்குகின்றேன். எக் களிப்பல்லாத ஓர் ஒப்புதலில், மௌனம் தன் தோலுரித்துக் கொள்கிற மாதிரியான பேச்சொலிகள். "இவர்களா?" இவர்கள் அல்ல என்றும் தோன்றுகிறது. கொஞ்சம் கொஞ்சமாக முன்பே தகர்ந்து கொண்டிருந்ததை இவர்கள் முழுமை செய்திருக்கிறார்கள் என்றும தானாகவே விழுந்து கொண்டிருப்பதை இவர்கள் நகர்த்தி இறக்கி வைத்திருக்கிறார்கள் என்றும் தோன்றியது. அவர்கள் நோக்க மொன்று நிறைவேறிப் போனதுபோல ஒரு திருப்தித்தொனி. சரி பார்க்கலாம் என்று இன்னமும் ஒதுங்கி நின்றிருந்தேன்.

"என்னப்பா இது?" என்றொரு சத்தம். அந்தக்குரலின் கூர்மையினூடே, அதற்குச் சொந்தமான மனிதனின் அகங்காரம் தொனி செய்வதுபோல "என்னப்பா இது?" யாரும் பதில் சொல்லவில்லை. தம் செயலே பதிலாகி விட்டதாக, அந்த நிகழ்ச்சியே பதிலாகிவிட்டதாக அவர்கள் நின்றிருந்தார்கள். சட்டென்று ஒரு பார்வையில், அந்த வெறும் பீடம் அவனுக்கு எல்லாமும் உணர்த்தியிருக்க வேண்டும். அவன் அதிர்ந்திருக்க வேண்டும். அந்தப் பீடத்தின் வாக்கியங்கள் முன்னைக் காட்டிலும் கூடப் பொருள் வெளிறி நிற்பதை அவன் பார்த்து சகிப்புக் கொள்ளாதவனாய்த் துடித்திருக்க வேண்டும்.

அந்தக் கும்பல் கலையத் தொடங்கவில்லை. ஆனால் பரவலாகியிருந்தது. இன்னமும் அடுத்த இலக்கை நினைவில் கொண்டவர்களாக அதனால் உத்வேகம் பெற்றவர்களாக அவர்கள் கிளம்புவார்கள் என்று நான் எதிர்பார்த்தேன். அதற்குள் தூரத்தில் ஒரு சைரன் ஒலி கேட்டது. கேட்டு, அவர்கள் கலைந்து போகும் ஆயத்தத்தில் சற்றே சிதறுண்டார்கள். ஆனால் ஒலி நெருங்கி விட்டது. ஒலி மட்டுமில்லை. அது அறிவித்த அந்தக் காவல் துறையினரும் கூட. தடிகளைச் சுழற்றியவாறு அவர்கள் இறங்கிய வேகத்தில் மொத்மொத்தென்று யாருடைய உடலோ, தலையோ, அடிபடுவது தெளிவாகக் கேட்டது. தப்புதல்கள் அற்ற தெருக்குறுக்கங்களில் திரளாக மனிதர், மனுஷியர் என்ன என்று நிதானிக்கும் முன்பு கவிந்த புகைப் படலத்தில் என்னைமீட்டுக் கொண்ட நான் கண்ணில்பட்ட திசையில் வேகம் கொண்டேன். என்னுடனே கூடச் சிலர். எத்தனை பேர், இனிப் பாதுகாக்க ஒன்றுமில்லாத வீழ்ச்சியின் சக்திகளால், அன்று தடியடிபட்டு, காயமுற்று, கால்களில் மிதிபட்டு, அங்கேயே தம்உடல் பலவீனத்தால், தாங்க முடியாமல் விழுந்து மாண்டும் போனார்களோ! நாங்கள் சிலர் மட்டும் ஓடிக் கொண்டிருந்தோம். ஆனால் இந்த ஓட்டம் மறுபடியும், ஒரு தங்குதலில் எல்லோரையும் இணைத்துக் கொண்டு, மீண்டுமொரு பொருள் மிக்க பயணத்தைத் தொடங்கும் என்று என் நினைப்பு.

நான் ஓய்வு கொண்ட சாலை சற்று விசாலமானது. போக்குவரவுகள் நின்றுபோன அமைதியில் நெடுமூச்சு விட்டுக் கொண்டிருந்

சன்னமான குரல்கள் அருகாமையில் எழுந்த வண்ணம் இருந்தன. ''சிலே திறக்கறனுகளாம், சிலே'' ''நூறு சிலேயாம் சார், அநியாயம்'' ''உம்'' ''கேட்க ஆளில்லேங்கற தைரியம். வீட்டுக்கொரு சிலே வைக்கக் கூடச் செய்வானுங்க.'' ''ஏற்கனவே, எத்தனே எத்தனே! 'ங்கப்பா!''

பொருள் புரியாதபடி அவர்களின் எதிர்ப்புணர்ச்சி மட்டும் தெளிவில்லாத குரலில் வழிந்தது. நான் அவர்களுடன் இன்னமும் சென்று கொண்டு தானிருந்தேன். என்னதான் செய்கிருர்கள் பார்க்கலாம் என்று குழந்தைத்தனமான ஆர்வம். என்ஞல் வேறேதும் செய்ய முடியவில்லே. செய்வதற்கு என்ன இருக்கிறது என்றே கூடப்புரியவில்லே என்று சொல்லலாம்.

வந்து சேர்ந்த இடம் ஒதுக்குப் புறமான ஒரு நாற்சந்தி. வெளிச்சம் சற்றுத் தெளிவில்லாமல் கசிந்தது. நாற்சந்தி மைய இடத்தில் வட்டப் பூங்கா ஒன்று. புல்வெளி. பீடம். பீடத்தில் தமிழில் எழுதப் பட்டிருந்தாலும்கூட தமிழல்லா ஓர் அந்நியத் தன்மையுடன் தெய்வீகப் படுத்தப்பட்டிருந்த வார்த்தைக் குப்பைகள். நான் இங்கே வந்திருக்கிறேன். இந்த நகரத்தின் சாதாரணக் குடிமகன் எவனுக்கும் பரிச்சயமாகியிருக்கிற ஒரு நாற்சந்தி இது. எல்லா ஊர்வலங்களும் இங்கிருந்துதான் தொடங்கும். எல்லாத் தலேவர்களும் இந்தச் சிலேக்கு மாலேயணிவித்துத்தான் தம் நகரவிஜயத்தைப் பிரபலப்படுத்துவார்கள். இந்தச் சிலே பிம்பப் படுத்துகிற மனிதனேக் கொண்டாடித்தான் ஒரு நாள் விடுமுறை அரசாங்க ரீதியாய் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சிலே தெரிவிக்கிற மனித உருவிற்குத் தான், வருஷந்தவருமல் நினேவு கூரல்களும், மேடை தவருமல் வாய்ப்பந்தல்களும், ஒரு பாமரன் தவருமல் போலித் தெய்வீக மரியாதை ஏற்றமும் நடைபெற்று வந்துள்ளன. எல்லா ஊர்வலங்களும் தொடங்குகிற இந்த இடத்தில் தான் இந்த ஊர்வலமல்லாத ஊர்வலம் முடியப் போவதாக எனக்குத் தோன்றுகிறது. எல்லா ஊர்வலங்களும் வாழ்த்துப் பாடுகிற இந்தப் பிம்ப மனிதனேத்தான் இந்த அணி சுயநிலேக்கு இறக்கப் போவதாய் எனக்குப் படுகிறது. ஓர் உள்ளுணர்வு போல, அவர்களின் அருகாமைக் கசகசப்பில் எண்ண ஓட்டமும், முனகல்களும்.

''இதுவுமா?''

''இதுவும்''

''ஆமாம். எல்லாந்தான்.''

''இதுவும்'' ''இதுவும்'' என்ற குரல்கள் வலுப்பெறுகின்றன. ஓர் ஆக்கிரமிப்புப்போல இந்தச் சிலேயின் அருகாமையில் ஒரு கும்பல் சேர்வது தெரிகிறது. இதைக் கும்பல் என்றழைப்பது தவறு. அவர்கள் ஒவ்வொருவரின் நோக்கமும் தெளிவாகத் தெரிந்தே ஒன்றுபட்டிருக்கிருர்கள். அவர்களின் உணர்ச்சியொருமை நடையில் செயலில் முகப்பிரதிபலிப்பில் எல்லாமும் என்ஞல் உணர முடிந்தது. நான் இன்னமும் ஒதுங்கித்தான் நிற்கிறேன்.

ஒரு பெரும் எக்களிப்பும் இல்லாமல் அது நடந்து முடிந்து விட்டது. உடைப்பு. உடைந்து போகக் கூடாதென்று நிச்சயிக்கப்

லலே. சாமி விக்கிரகத்தையே போட்டு ச்சே...சொல்ல முடியாம நாக்கு புரளுதப்பா. அந்த அக்கிரமத்தைக் கேக்கவே ஆளுங்க யாரு மில்லே. இதைத்தான் கேக்கப் போருனுங்களாக்கும்''

"ஆனலும் தாத்தா,'' என்று தொடர்ந்தான் அந்த ஆள். "இப்படிப் பண்ணக்கூடாது. பாவம் என்ன செஞ்சார் அவர்?''

"யார்தான் என்ன செஞ்சாங்க? எல்லாம் நாம செய்யறது தான். சாமின்னு தூக்கி வச்சுக் கொண்டாடறதும், கும்பிடறதும் நாம தான். பாவின்னு தூக்கிப் போட்டு உடைச்சு த்வம்சம் பண்ணற தும் நாமதான்.''

எனக்குக் கிழவனைக் கேட்கச் சலிப்பாயிருந்தது. தன்னுள் ளேயே சஞ்சரித்தபடி அவன் பேசிக் கொண்டிருந்தான். எதிரே ஆள் இருக்கிற உணர்ச்சியில்லாமல் எங்கோ பார்த்தவாறிருந்தான்.

"இருந்தாலும் அநியாயம்'' என்ருன் அந்த ஆள்.

"எது?'' என்ருன் அந்த ஆள். சொன்னதெல்லாம் வீண் போல அந்த ஆள் முறைத்தான். நான் காலி கிளாஸைக் கீழே வைத்து விட்டு காசைத் தந்த பின்பு நகர்ந்தேன். இனி அந்த உடைப் பில் என் பங்கும் உண்டென ஒரு தெளிவு. அந்த உடைப்பு, புதி தொன்று, பிறிதொன்று கட்டுவிக்கும் என்று எதிர்பார்ப்பு. அந்த, வழிபாட்டு உணர்வைச் சிதைக்கும் செயலாளிகளுடன் இணைந்து கொள்ள எண்ணி நடக்கிறேன். கிழவனும், அந்த ஆளும் பின் தங்கி விடப் பாதை விரிந்து பரவுகிறது. ●

---


# கசடதபற

**தனி இதழ் 50 காசு** **ஆண்டுச் சந்தா ரூ, 5/-**

**மணியார்டர் மூலம் பணம் அனுப்புபவர்கள் தங்கள் முகவரி யைத் தெளிவாக எழுதியனுப்ப வும். சந்தாதாரர்கள் இதழ் பிரதி மாதம் 7 தேதிக்குள் கிடைக்கா விட்டால் தெரிவிக்கவும்.**

**கதை, கட்டுரை, கவிதைகளை கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்ப வும்.**

**பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப் பெற போதிய தபால் தலைகள் இணைத்து அனுப்பவும்.**

**தொடர்பு முகவரி :**

**ஆசிரியர் : கசடதபற**

**23, பி. எஃப். குவார்ட்டர்ஸ்**

**சென்னை 600 034**

தது அந்தச் சாலே. நடையை நான் தளர்த்திக் கொண்டு விட்டேன், மெதுவாக நடந்தேன். ஒரு விளக்கினடியில் கிழவன் ஒருவன் உள்ளங்கையில் வைத்துக் காசுகளே எண்ணிக் கொண்டிருந்தான். அருகில் சென்றேன். அவனருகில் கனப்பு ஒன்றும், அதன் மீது ஏதோ வைக்கப்பட்டும் இருந்தன.

"என்ன" என்றேன். அவன் நிமிர்ந்து பார்த்தான்.

"மல்லிக்காப்பி", என்றுன்.

"ஒரு கிளாஸ்" என்று சொல்லிவிட்டு அவனருகில் நடை பாதையில் களேத்தவனுக உட்கார்ந்தேன். தூரத்திலிருந்து யாரோ எங்களே நோக்கி வருவது போலிருந்தது. கிழவன் மிகவும் நிதான மாய்க் காசுகளே எண்ணி முடித்துச் சுருக்குப் பையில் போட்டு, வேட்டி மடிப்பில் வைத்து இடுப்பில் கட்டிக் கொண்டு, கணப்பின் மேலிருந்த பாத்திரத்தைத் திறக்கும் முன்பு தூரத்தில் தெரிந்த அந்த ஆள் அருகிலேயே வந்து விட்டான். இருவருமே அவனைப் பொருட் படுத்தவில்லே. கிழவன் ஒருமுறை அவனே ஏறிட்டுப் பார்த்துவிட்டு அலட்சியப் படுத்திவிட்டான். எனக்காக ஒரு கிளாஸில் சுக்குமல்லிக் காப்பியை ஊற்றித் தந்தான். நேரங்கடந்ததால் சூடு தணிந்து, அதனுலேயே அதன் சுவையும் குறைந்த மாதிரி எனக்கு உணர்ச்சி. ஆனுல் நிச்சயம் சாக்ரின் இருக்காது. வாங்கி, உறிஞ்சிக் கொண்டே அந்த ஆளே நிமிர்ந்து பார்த்தேன். ஏதோ எதிர்ப்பார்ப்பவன்போல, நாங்கள் பொருட்படுத்துவது ஒன்றுதான் அவனுடைய அந்தநேர லட்சியம்போல, அவன் காத்திருந்தான்.

"என்ன தாத்தா-சுக்குக் காப்பி தர்றியா?" என்றுன். கிழவன் தலேயை ஆட்டிவிட்டு பானத்தை அவன் எடுக்க முற்பட்ட நேரத்தில் அந்த ஆள் என்னருகில் அமர்ந்தான்.

"பார்த்தியாப்பா? அந்த மனுஷர் சிலேயை உடைகருங்க— அநியாயம். பாவம் அவர் என்ன செஞ்சார் இவங்களே?"

கிழவன் ஒரு முறை அவனேத் திரும்பிப் பார்த்து "என்ன?" என்றுன்.

"உடைப்பு"

"என்ன?" என்றுன் மறுபடியும் கிழவன்.

"சிலேயை உடைக்கருங்க தாத்தா." மல்லிக்காப்பியை உறிஞ் சியவாறு நான் கவனத்தைச் செலுத்தினேன். "என்ன அநியாயம்— அவர் சிலேயை!"

"எவன் சிலேயை?"

"அவர் தான் நம்ப தெய்வம்"

"போடா போ" என்று கைத்துப்போன தொனியில் சிரித் தான் கிழவன். "உடைக்கிருனுங்களாம். முன்னே இது மாதிரிதான் ஒருகாலம். நீ தெய்வம்னு சொல்ற இந்த ஆசாமி சிலேயை உடைக்கற துக்குக் கோபப்பட்டுக் கத்தறியே, அப்ப யாருமே எதுவுமே சொல்

# அக்கம் பக்கம்

சென்னை மாநகர நூலக ஆணைக்குழு சுமார் இரண்டாண்டு களாகச் செயல்படவில்லை. ஏதோ காரணங்கள். எல்லா உறுப்பினர் களும் ஒட்டு மொத்தமாக விலக, தலைவர் மட்டுமே தனித்து இருக் கிறார். எனவே சென்னை நூலகங்களுக்குப் புதிய புத்தகங்கள் வாங்க முடியவில்லை.

சில மாவட்ட நூலகங்கள் பணமில்லாது புதிய புத்தகங்கள் வாங்க முடியாத நிலையில் உள்ளன. ஆனால் சென்னை மாநகர நூலக ஆணைக்குழுவோ பணமிருந்தும் நிர்வாகக் காரணங்களால் புத்தகங் கள் வாங்காது இருக்கிறது. இதனால் வாசகர்களுக்கு புதுப் புத்த கங்கள் கிடைப்பதில்லை; புத்தக வெளியீட்டாளர்களுக்கு விற்பனை இல்லை; ஆசிரியர்களுக்கு வருமானமில்லை. இருந்தும் மக்கள் நூலக வரி மட்டும் செலுத்துகிறார்கள்.

மாநகராட்சி வசூல் பண்ணும் நூலக வரியை அவ்வப்போது நூலகத்திற்குத் தருகிறார்களா இல்லையா என்பதும் தெரியவில்லை. எப்படியோ நடைமுறைகள் சீர் செய்யப்படாததால் தலைநகர் நூலகம் அநேகமாகச் சீரழிந்து விட்டது. நூலகத் துறைக்குப் பொறுப்பான கல்வி அமைச்சகத்திற்கு இதனை நிவர்த்தி செய்யும் காரியத்தைவிட வேறு பல முக்கியச் செயல்கள் இருப்பதால் தான் இதனை இந்த இரண்டாண்டு கால இடைவெளியில் கவனிக்க முடியாமலேயே போய்விட்டது என்று நம்புவோமாக!

* * *

நூலக இயக்குநர் அலுவலகம் சமீபத்தில் "நூல் அறிமுக விழா" ஒன்றை எடுத்தது. முந்திய ஆண்டில் வந்த புத்தகங்களை ஒன்றாகச் சேர்த்து காட்சிக்கு வைத்தல்—என்ற அதன் திட்டம் நல்லது தான். ஆனால் அது செயல்பட்ட விதம்தான் விசித்திரமானது.

காட்சிக்குப் புத்தகங்களை அரசு காசு கொடுத்து வாங்க வேண்டும். அதைவிட்டு விட்டு ஓசியில் இரண்டிரண்டு பிரதிகள் பெற முயல்வது கண்டிக்கத் தக்கது. புத்தகங்களின் பிரதிகளைக் கொடுக்காவிட்டால் பின்னால் வரப்போகும் 'பெரிய' ஆர்டர் கிடைக் காமல் போய்விடுமோ என்கிற பயத்தை—ஐயத்தை பிரசுரகர்த்தர் களுக்கு அரசு எந்த வகையிலும் ஏற்படுத்தக் கூடாது.

I

அவன் வாசலில் நின்று கொண்டிருந்தான். உள் வெராண்டாவில் அவன் வயோதிகமான தந்தையின் பிணம் கிடத்தப்பட்டிருந்தது. அவன் நண்பர்கள் அவனைப் பார்க்க வந்தார்கள். அவன் முகத்தில் ஒரு சலனமுமில்லை. அவர்களிடம் அவன் சுருக்கமாகச் சொன்னான் "கடைசியாக அது நடந்துவிட்டது." அவனைத் தெரிந்த அவன் நண்பர்கள் அவன் ஏன் அப்படிச் சொன்னான் என்று நினைத்துக் கொண்டே திரும்பிப் போனார்கள்.

II

அவன் அறையில் அவன் உட்கார்ந்து கொண்டிருந்தான். வேறு யாருமில்லை. அவன் காலடியில் அவன் நாய் அரைவட்டமாக, முகம், வால் அருகில் ஒரு இடைவெளி புலப்பட, பதித்துப் படுத்துக் கிடந்தது. அவன் தன் காலால் அதன் வயிற்றின் சூடான மிருதுவான சதையைத் தொட்டான். நாய் வாலை மெதுவாக ஆட்டிக் கொண்டு எழுந்து சோம்பல் முறித்துவிட்டு அவனருகில் வந்து அவன் காலை நக்கிவிட்டு, மீண்டும் சற்றுத் தள்ளிப் படுத்துக்கொண்டு அவனை உன்னிப் பார்த்தது. அப்பொழுது அவனுக்குத் தோன்றியது—வாயில்லா ஜீவன்களுடன் நமக்கு ஏற்படும் உறவே ஒரு தனி வகைப்பட்டதென்று.

III

போன மாதம்—என்றுதான் நினைக்கிறேன்—சர்வகலாசாலை நூல் நிலையத்தில் ஒரு ஐந்து வருஷத்திற்குப் பின்—சுசீலாவை எதிர்பாராதவிதமாகப் பார்க்க நேர்ந்தது. சிநேகிதிகளுடன் பேசிக் கொண்டிருந்தவள் என்னைப் பார்த்தவுடன் விரைவாக என்னிடம் வந்தாள். "இப்பொழுது எங்கிறிக்கிறீர்கள்?" அவள் தான் வேலை செய்யும் இடத்தைச் சொல்லிவிட்டு "எப்பொழுதாவது அங்கு வந்தால் என்னை வந்து பாருங்கள்" என்றாள். பிறகு அகஸ்மாத்தாக அங்கு போக நேர்ந்தது. கூட சிவனும் இருந்தான். என்னைப் பார்த்ததும் வந்தாள். "இந்த ஊருக்கே வந்துவிட்டீர்களா?" என்றாள். "இல்லை, ஒரு எழுத்தாளர் கூட்டத்திற்கு வந்தேன்" என்றேன். அவள் இருப்பிடத்திற்குப் போய்விட்டாள். மணி ஒன்றாகிவிட்டது. சிவனிடம் "போகலாமா?" என்றேன். "அவளிடம் விடை பெற்றுக் கொண்டு வாருங்கள்" என்றான். அவன் இருப்பிடத்திற்குப் போனதும் அவள் சாப்பிடப் போய்விட்டதாகத் தெரிந்தது. நாங்கள் இருவரும் எங்கள் இருப்பிடம் போகும் வரையில் ஒன்றும் பேசவில்லை. ●

அதோடு நூலாசிரியர்களுக்கு இயக்குநர் அனுப்பியிருந்த "கேள்வித்தாள்" என்ற அநாகரித்தை இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியாது. நூலின் பெயர், பக்கம், தாளின் கனம், ராயல்டி பெற்றது எவ்வளவு, **Out right** ராயல்டியா, %ராயல்டியா, நூலகத்திற்கு விற்றது எவ்வளவு, தனியார்க்கு விற்றது எவ்வளவு, இத்யாதி... இத்யாதி...

இவைகளில் பல கேள்விகளுக்கு ஆசிரியர் என்கிற முறையில் எப்படிப் பதில் சொல்லமுடியும் என்பதை அமைப்பாளர்கள் கொஞ்சமாவது யோசித்தார்களா என்பது கேள்விக் குறி.

முக்கால் வாசி எழுத்தாளர்கள் நூலே அனுப்பவில்லை. அனுப்பிய புத்தகங்களையும் ஒரு முறையறை இல்லாமல் பரப்பி வைத்திருந்தார்கள். ஆனால் காட்சிக்கு வந்த மாண்பு மிகு டாக்டர் நாவலர் மனங் குளிர—அவரும் மாண்பு மிகு டாக்டர் கலைஞர் கருணாநிதியும் இணைந்திருக்கும் அட்டைப் பட புத்தகம் ஒன்றை வெகு கவனமாக முதலில் வைத்திருந்தார்கள். அரசின் செயல்கள் தனிப்பட்டவர்களின் அபிலாஷைகளை நிறைவேற்றித் தரும் காரியமாக மாறுவது தனிப்பட்டவர்களின் பலவீனத்தால் மட்டுமே நிகழ்வதில்லை.

✽ ✽ ✽

நூலக இயக்குநர் அலுவலகம் இன்னொரு காரியத்தையும் செய்யப் போவதாகச் தெரிகிறது. தமிழ்ப் புத்தகங்களின் விலையைச் சீராக்க முயற்சி செய்யும் வகையில் க்ரௌன் சைஸ் புத்தகமென்றால் பாரத்திற்கு (16 பக்கங்களுக்கு) 50 காசு; டெம்மி சைஸ் என்றால் 60 காசு என்று நிர்ணயிக்கப் போகிறார்களாம்.

நேர்த்தியாக, படங்களோடு, உயர் ரக காகிதத்தில், சிறந்த அச்சகத்தில் நல்ல மை கொண்டு அச்சடித்து, பைண்ட் செய்து புத்தகம் கொண்டு வருகிறவர்களுக்கு—அடக்கத்திற்குக் கூட நூலக இயக்குநர் நிர்ணயிக்கும் விலை கட்டிவராது. புத்தகம் என்ற பேரில் வெள்ளைத்தாளை கருப்பாக்கித் தருகிறவர்களுக்கு அது போதும்; நூலக இயக்குனருக்கும் அது திருப்திதரலாம். ஆனால் நல்ல எழுத்தையும்—உயர்தரமான புத்தகத் தயாரிப்பையும் வேண்டுகிறவர்களுக்கு இந்த நிர்ணயவிலை கட்டுபடி ஆகாது. அவர்கள் நூலகத்திற்குப் புத்தகம் தரமாட்டார்கள். அந்த நஷ்டம் வியாபாரிகளுக்கு இல்லை. மக்களுக்குத்தான். காரியங்கள் செய்ய வேண்டியவர்கள் இதையும் மனதில் வைத்துக் கொண்டு செயல்பட வேண்டும்.

நா. கிருஷ்ணமூர்த்தி

Published by N. Mahaaganapathy, I-20, Turnbull Road, Nandanam, Madras-600 035. Printed by M. K. Swamy at Prem Press, 8 M. K. Amman Koil Street, Madras-600 004. Editor : N. Krishnamurthy